# யாதவமித்திரன்.

## ஒரு மாதப்பத்திரிகை.

எனைத்தானும் நல்லவை கேட்க அனைத்தானும்
ஆன்ற பெருமை தரும்.

தொகுதி 2 } பிரஜோத்பத்தி௵ ஆடி மீ 1931-௵ ஜூலை மீ { பகுதி 12

### கடவுள் வணக்கம்.

பந்தார் மெல்விரல் நல்வளைத் தோளி
பாவை பூமகள் தன்னொடும் உடனே
வந்தாய் என் மனத்தே மன்னி நின்ருய்
மால் வண்ணு மழை போல் ஒளி வண்ணு
சந்தோகா! பௌழியா! தைத்திரியா!
சாம வேதியனே! நெடுமாலே
அந்தோ! நின் அடியன்றி மற்று அறியேன்
அழுந்தூர் மேல் திசை நின்ற அம்மானே!

திருமங்கையாழ்வார்.

செங்கோட்டையிற் கூடிய

## 2-வது வாலிபர் சங்கம்.

(முன் 352-வது பக்கம் தொடர்ச்சி)

எச்சங்கத்தார், பத்திரிகைகளிலும், உபந்நியாச மேடைகளிலும் மற்ற சமூகாசமூக உபகார விஷயமாய்ப் பேசுவது தேசத்திற்குக் கெடுதலென்று சொல்லுகிறார்களோ, அவர்களே தங்கள் சமூகத்தார் மாத்திரமே கவர்ன்மெண்டு உத்தியோகத்திலும், கௌரவ நிலைமைகளிலுமிருந்து மற்ற புறச்சமூகங்களை வளரவிடாமல், தேசத்திற்கு அநியாயம் செய்து வருகிறார்கள்.

தேசத்தில் ஜாதி பேதம் உள்ளவரையிலும், இக்கெட்ட பேதம் மனிதருக்குள்ளிருக்கும் வரையிலும், சமூக பேதமிருந்தே தீரும்,

ஆகையால், சமயத்திற்கேற்ற பிரகாரம் எழும்பி, நம் சமூகத்திற்குத் தக்கதாய்ப் போர் செய்வது உத்தமம்.

நான் முன் கூறினதுபோல, பிரதி சமூகத்தார் தாழ்ந்த நெருக்கப்பட்ட ஜாதியாரின் சம்பந்தமாகப் பிரயாசப்படுவதால், தங்கள் நோக்கத்தைச் சற்றும் இவ்வற்ப சமூகத்தின்மீது வையார். சமூகத்தின் விஷயமாக, அரசாங்கத்தார் கட்டளை ஊடுருவியும், சமூகப் பிரதிநிதியை ஏற்படுத்த உத்தரவாகியும், நம் சமூக விஷயமாக அவை இன்னும் அமுலுக்கு வரவில்லை.

இது கண் பூச்சா, அல்லது வெண் பூச்சா? நமக்கு நியாயஞ் செய்வதற்குப் பதிலாக, அவர்களிறக்கையை மாட்டிப் பறந்துவிட்டார்களென்று நினைத்துக்கொள்ள வேண்டியதா? நாம் தாழ்ந்தவர்களாயிருந்த காலத்தும், மற்ற சமூகத்தாரால் இகழப்படவும், அவமதிக்கப்படவு மிருந்தால், நமது நிலைமையை என்னவென்று கூறலாம்? நாம் அரசாங்கத்தாரை நம்முடைய சஞ்சலங்களைக் கேட்காதபடிக்கும், மற்ற சமூகத்தாரை நமக்குரிய சுதந்தரங்களை மேற்பராக்காய்ப் பார்க்கவும், அவர்களே தேச விஷயமாகவுள்ள பாத்தியதைகளை யடையவும் விட்டுவிடலாமா?

இச்சமயத்தில் "லோக்கல் செல்ப் கவர்ன்மெண்டில்" (Local Self Government) மந்திரி உத்தியோகம் வகித்துப்போன டாக்டர் சுப்பராயனைக் கல்வி நாகரிக மற்ற சமூகத்தார் மறந்து போகார். ஒருவருக்காவது, ஒரு சமூகத்திற்காவது, ஒரு தேசத்திற்காவது மேன்மை செய்தவரைவிடக் கேடு வருவித்தவரையே அதிகமாய் நாம் மனதில் வைத்துக்கொள்வோம். நானிவ்விதம் சொல்வதைப் பற்றி ஆச்சரியப்படவேண்டா. மேற்சொல்லியவர், "லெஜிஸ்லேச்சரில்" முக்கியமாயிருந்து, தம்முடைய 'பில்லை (Bill)ச் சட்டமாக்கி, தெரிந்தேற்படுத்துதலை ஒழித்தவர். இராஜதானியில் சில இடங்களில் அதிகமாயிருப்போரின் சமூகத்தினருக்கு மாத்திரம் சிலாக்கியம் கொடுப்பது அவருடைய உத்தேசமா யிருக்கலாம். ஆயினும், அவர் 'பில்' (Bill) பிரகாரம் சின்ன சமூகத்தினருக்கு இடமுண்டு. அவர்கள் யாரெனில், ஆதித் திராவிடர், கிறிஸ்தவர்கள், ஆங்கில இந்தியர், ஐரோப்பியர், மகம்மதியர்கள் ஆகிய இவர். மற்றவரின் கதியென்ன? புது 'பில்' பிரகாரம், வரப்போகிற "எலக்ஷனு"க்குப் பின்னால் நம் சமூகம் போன்ற அநேக சமூகத்தாருக்கு நடந்திருக்

கும் அநியாயம் நன்ருய்ப் புலப்படும். கல்வி நாகரிகமற்ற சமூகத்தார் எனப்படும் எல்லோரும், சிலாக்கியம் பெற்ற சமூகத்தினரிலும் ஜன சங்கியையில் அதிகமேயாவர்.

தெரிந்தெடுக்கிறதற்கு எல்லோரும் விரோதமாயிருக்கு மிக் காலத்தில், நானொருவனுக என் சமூகத்திற்காகவும், நம்போன்ற சகோதர சமூகங்களுக்காகவும் தெரிந்தெடுத்த வில்லாவிட்டால் நேரிடும் தீமையை அழுத்திச் சொல்லுகிறேன். வயது விஷயம், சுய தேசக் கிளர்ச்சி, சுயராஜ்யம் என்னும் வார்த்தைகளினுல், என் சகோதரரே, நீங்கள் மூடப்படாமல், சமூகத்திற்காக உழைப்பது முக்கியமான அவசரம்.

என் சமூகத்தினரைப் போலப் பின்னுகவிருக்கும் மற்ற சகோதர சமூகங்களும், இராஜாங்கத்தைச் சாருவதோ அல்லது உள்நாட்டுக் கிளர்ச்சியைச் சாருவதோ எனத் திகைத்து நிற்கின்றன. முன்னேறின சமூகத்தினர், நம்பொருட்டாக எண்ணுமல், இராஜாங்கத்தில் வரவிடாமல் நமக்கு வரவேண்டிய சுதந்தரங்களேயும், தம் சுய லாப ஆசையால் கவர்ன்மெண்டுங்கூட நமது பாத்தியதைகளேக் கவனிப்பதில்லே. இச்சங்கதிகளே, என்னேவிட அனுபவத்திலும், ஞானத்திலும், அறிவிலும் முதிர்ந்த நம் சகோதரர், நம் இராஜதானிக் கூட்டங்களில் தீர்மானிக்க விட்டுவிடுகிறேன்.

'ஜஸ்டிஸ் கட்சி' (Justice Party)க் காரரைப்பற்றி ஒரு வார்த்தை இங்குக் கூறுவது உத்தமம். சுய நலமற்று உழைத்து, தேசாபிமானக் கிளர்ச்சி உண்டாக்கின டாக்டர் நாயர், ஸர். தியாகராயர், பானகல் ராஜா இம்மூவருக்கும் பிராமணரல்லாதார் எவ்வளவோ கடமைப்பட்டிருக்கிறேம். நம் கஷ்டங்களே நிவர்த்தி செய்து, முன்னேறின சமூகத்தினரையும், எல்லாப் பிராமண ரல்லாத சமூகத்தினரையும் அவர்கள் முன்னுக்குக் கொண்டுவர முயன்றனர். இப்போது பார்க்கையில், முன்னேறினவர்கள் இன்னும் முன்னேறியும், பின்னுகவுள்ளவர்கள் இன்னும் பின் வாங்கியும் போகிறதாகக் காணப்படுகிறது. ஜஸ்டிஸ் கட்சியார், ஸைமன் கமிஷனுக் கெழுதிய அறிக்கைப் பத்திரத்தில் மாண்டேகு செல்ம்ஸ்போர்ட சீர்திருத்தங்களுக்குப் பின், இராஜாங்க விஷயங்களில் உயர்குல சமூகத்தார் முன்னேறி வந்தார்களே யொழிய பின் வாங்கின சமூகத்தார் எவ்விதமான முன்னேற்றமு மில்லாமலிருப்பதைத்

தெரிந்துங்கூட, அவர்களின் கஷ்ட சுகங்களைத் தெரிவிக்காமல் முழுவதும் விட்டுவிட்டனர். ஜஸ்டிஸ் கட்சியார், முன்னேற்ற மற்ற குலங்களின் நியாய உரிமைக்காகப் பாடுபட வேண்டுமென்றிருந்தால், அச்சமூகங்களைத் திருப்தி செய்யும் முறைகளைத் தேடி இப்பொழுதாகிலும் கையாள வேண்டும்.

இவ்விடம், தாழ்ந்த ஸ்திதியிலிருக்குமொரு சமூகத்தின் அறிகுறி லட்சணங்களை எடுத்துக் கூறும்படி என்னைக் கேட்கலாம். தகுந்த விதிப் பிரகாரம் தன் சமூகத்தின் பிரதி நிதிகள் இராஜாங்க உத்தியோகம் வகிக்கப் பெற்றிருந்த பிரதி சமூகமும், லோக்கல் போர்டுகளிலும், முனிசிபாலிட்டிகளிலும், சட்ட சபைகளிலும், தனக்கு உரிமை பாராட்ட வழியில்லாத பிரதி சமூகமும், தாழ்ந்த ஸ்திதியி லிருப்பதென்றே தெளிவுறக் கூறலாம்.

ஆகவே, ஒவ்வொரு சமூகத்தின் நீதியும், நியாயமுமான உரிமைகளெல்லாம் திருப்திபெற நிறைவேறும் வரை தேசத்தில் அதிருப்தி, அவநம்பிக்கை அதிக கோளாறு முதலியவை மேலிடுமென்பதே எனது உண்மையான தாற்பரியம்.

நான் முன்னெடுத் துரைத்ததுபோல இவை எல்லாவற்றிற்கும் ஜாதி வித்தியாசமே மூல காரணம். ஆகையால், என் பாலிய சகோதரர்களே, உங்கள் சொந்த சமூகத்தின் நல்வாழ்வைக் கருதி எவ்வாறு உழைக்கிறீர்களோ, அவ்வண்ணமாகவே, இத்தேசத்தின் கடுஞ்சத்துருவை யொழிக்க உங்களுக்கிருக்கும் வல்லமை, உற்சாகத்தோடு ஒவ்வொரு கிளர்ச்சியிலும் அபிமானங் காட்டிச் சேரும்படி நான் உங்களைப் பிரார்த்திக்கின்றேன். இச்சந்தர்ப்பத்தில் தேசாபிமானியும், தன்னயமற்ற உழைப்பாளியுமாகிய இராமசாமி என்பவரை நான் சகல மரியாதைகளுடனும் தலைகுனிந்து வணங்குகின்றேன். இக்காலத்து ஜன சமூகச் சீர்திருத்தக்காரரும் சுயமரியாதைச் சங்கத்தின் ஆரம்ப கர்த்தாவும் அவரே.

தேசத்தின் பல ஜாதிகளையும் இணைக்கும்பொருட்டு இப்பெரிய ஊழியங்கள் எவ்வளவுக்கு அதிகமாக நடந்தேறிய போதிலும், நமது நாட்டின் பெரியோர் நாநா திக்கிலும் முன்னேற்றத்திற்குத் தடையாய் நிற்கும் இச்சாதி பேதத்தின் கொடுந்தன்மையை உணர்ந்துகொள்ளும்வரை, நாம் நமது சங்கத்தின் இரக்ஷணியத்திற்காக, மறதியற்றுப் போராடத்தான் வேண்டும்.

ஐசுவரிய ஸ்திதிப் பிரகாரம் பார்த்தால், நாம் ஏழைகள். ஏனெனில், ரிரக்ஷரகுக்ஷித்தனத்தைக் குறித்து நான் முன் சொன்ன காரணங்களே நம தெளிமைக்கும் காரணங்கள். விளங்கச் சொல்லின், நாட்டின் பல உத்தியோகங்களை நாம் வகித்துச் செய்யாமலும், சமூகத்தின் கைத்தொழில் வியாபாரப் பெருக்குக்காகக் கவலையுறாமலும், மாமூலானவைகளையே பின்பற்றி வருகிறோம். ஆயினும், சமயம் தப்பவில்லை. கையில் தனமுற்ற சகோதரர் முன் வந்து, ஆரம்பத்தில் அற்பமாயினும், வியாபாரத் தொழில்களில் தம் முதலைப் போடவேண்டும். சமூகத்தின் ஐசுவரியத்தை அதிகரிக்கச் செய்யும் ஒரே வழி அதுவே.

அருகிலிருக்கும் சகோதரி சமூகங்கள், உத்தியோக வியாபாரப் பெருக்கினுல் நாளுக்கு நாள் முன்னேறிச் செல்வதை நீங்கள் பார்க்கவில்லையா? அவ்வாறு செய்யாது உங்களைத் தடுப்பதெது? விழித்தெழுப்பிக் காலத்திற்கேற்ப உயர் பதவியை நோக்குங்கள்.

திடகாத்திரப் பிரகாரமாகப் பார்க்கின், நம் முன்னோர் அவர்கள் முன்னோரைவிடவும், நாம் நம் முன்னோரைவிடவும் வலிமையற்றவர்களென்பதை நாம் காண்கின்றோம். ஆகவே, விதிப்பிரகாரம், நம் பின்னோர்கள் நம்மைவிடப் பலவீனமுள்ளவர்களாயிருப்பார்கள். அவர்கள் சந்ததியின் சரீர ஸ்திதி எப்படியிருக்குமோ! நாளுக்கு நாள் நாம் க்ஷீணித்து, அற்ப ஆயுளுள்ளவர்களாகிறோம். திடகாத்திரத்திற்குத் திடமனமுண்டு. இரண்டு மிணைந்து நம தாயுளை நீடிக்கச் செய்கின்றன. ஆகவே, நீடிய ஆயுளைக் கோருவதே ஒவ்வொருவரின் கடமையாகும். பிராணன் உள்ளவரையில் ஒவ்வொரு பிரகிருதியும் குடும்ப, சமூக, தேச உயர் நிலைக்காகப் போராடக்கூடும்.

ஆகையால், என்னுடைய வாலிப சகோதரர்களே, நாம் தேகாப்பியாசத்தை விட்டுவிடுவோமாகுல், நாம் நம்முடைய சமூகத்தின் நலத்தையும் தேசநலத்தையும் அசட்டைபண்ணுகிறவர்களாயிருப்போம். நம்முடைய சமூகத்தில் சரீர பலமற்றவர்கள் வேண்டுவதில்லை. நம்முடைய தேசத்திற்காகப் பலமும் சக்தியும் உள்ள புருஷர்கள் வேண்டும். பலவானே தைரியவான்.

ஜப்பான் தேசத்து ஆடவர் ஒவ்வொருவரும் மல்யுத்தத்தில் தேர்ச்சி பெற்றவரென்று தெரியவருகிறது. இளைஞருக்கென்றும்,

வாலிபருக்கென்றும் இரண்டு வகையாக மல் யுத்தம் கற்பிக்கப்பட்டு வருகிறது. இதுவுமொரு பிரத்தியேகமான சாஸ்திரமாகவே வழங்கி வருகிறது. ஜப்பான் தேசத்தவர்களும், இவ்வித்தையினால் முக்கிய பெருமை கொண்டவர்களா யிருக்கிறார்கள். நாகரிகம் பொருந்திய மேல்நாட்டு வாலிபர்களை ஜப்பானுக்கனுப்பி, ஒருமனிதனைப் பலவா னாக்குவதுமன்றி, அவன் தன்னை எதிரிகளினின்று காத்துக்கொள் ளும் வகையையும் காட்டு மிவ்வித்தையைக் கற்றுத்தேறும்படி செய்கிறார்கள். மேல்நாட்டார் சுய பாதுகாப்புக்காகவே அவ்வித் தையைப் பெரிதாகப் பாராட்டிவருகிறார்கள். இதைவிட மிகச் சிறந்த சிலம்பவித்தையைக் கற்கும் வாலிபரின் உடலின் ஒவ்வொரு பாகமும் சுறு சுறுப்பும் வலிமையும் அடைவதன்றி, மனோ தத்து வங்களும் ஒழுங்காகின்றன.

இவ்வித்தையைக் கல்லாத ஒவ்வோர் இந்திய வாலிபனும், பூரணப்பயிற்சி அடைந்தவனல்லன். ஒரு காலத்தில், இவ்வித்தை ஒவ்வொரு குடும்பத்திலும் மிக முக்கியமானதாகப் பாராட்டப்பட்டு வந்ததுண்டு. இக்காலத்திலோ, உத்தரவாதமற்ற கல்வி, அறிவற்ற சிலர் கைகளில் விழுந்து, அவர்களுக்கே ஆதீனமாயிற்று. இக் காரணத்தை முன்னிட்டே இவ்வித்தையானது மகிமையற்று, அவமதிக்கப்பட்டுப் போயிற்று.

சகோதரர்களே, சந்தர்ப்பம் நேரிடும்போது ஒருவன் தன் னைப் பராக்கிரமத்தினால் பாதுகாத்துக்கொள்ளுவதில் அவமான மொன்றுமில்லை. மனிதனுக்குப் பேருதவியாயிருக்கும் வித்தையே சிறப்புப்பெற்றது. ஆகையால், இவ்வித்தையை உயிர்ப்பியுங்கள். நீங்களெல்லோரும் இச்சிலம்ப வித்தையை உற்சாகத்துடன் பயின்று, உங்கள் முன்னோரைப்போல விளங்கவேண்டுமென்பதே என் தாழ்மையான பிரார்த்தனை.

இக்காலக் கல்வியானது, மார்க்கபோதனை அடங்கியதன்று என்பது விசனிக்கத் தகுந்ததே. குடும்பங்களிலும் மார்க்க போதனை கள் குறைவே. தாம் மார்க்க வைராக்கிய முள்ளவர்களென்று நினைக்கும் சிலரும் வெளிப்படையான சடங்காசாரங்களையே மிகுதி யும் பாராட்டிவருகிறார்களே யல்லாமல், அவர்களுக்கு நிஜமான பக்தியில்லை என்றே சொல்லலாம். உலகமுழுவதும், நமது இந்தியா தேசம் பக்தியில் சிறந்ததென்று பாராட்டி வருகிறது.

மேலும், யாவரும் ஸ்ரீகிருஷ்ண பரமாத்துமாவின் நித்திய பாடலாகிய பகவத்கீதைக்குத் தலைகுனிந்து பணிகின்றனர். ஆனால், நித்திய கிருத்தியமாக அதை ஆசரிக்காமல் நம்மவர்கள் விட்டுவிட்டது நமது துரதிர்ஷ்டமேயாகும்.

என் யாதவ சகோதரர்களே, பிரபஞ்சத்திற்குப் பகவத் கீதையைக் கொடுத்ததற்காக உலகத்தாரெல்லாரும் இந்து தேசத்தை மகிமைப்படுத்துகிறார்கள். பகவத் கீதையிலுள்ள இரக்ஷணிய மார்க்கம், உங்கள் பெருமானாகிய ஸ்ரீகிருஷ்ணபகவான் கொடுத்ததென்பதை மறக்காதீர்கள். இவ்வர்த்தமானம், முதலில் யாதவ அரசனாகிய அருச்சுனனுக்கும், அவன் மூலமாக நமக்கும் கொடுக்கப்பட்டதென்பதை மறந்துவிடாதீர்கள். ஆகையால், இந்தச் சுதந்தரத்தைப் பாதுகாத்தும் பகவத் கீதையைத் தினந்தோறும் ஆராய்ச்சி செய்து, பயிற்சி செய்து, நமது ஜீவியத்தில் பிரதி தினமும் ஸ்ரீகிருஷ்ண பகவானைப் பூஜிப்பது நமது கடமையென்பதை நன்குணரவில்லையா?

ஸ்ரீ கிருஷ்ணபகவான் உபதேசத்தைப் பகவத் கீதையால் நாம் தெரிந்து நடக்கும்போது, பகையொழிந்து, அன்புண்டாகிறது. மதத்துவேஷம் நிறைந்திருக்கிற இக்காலத்தில் அதிக முக்கியமாய்க் காணப்படவேண்டிய புறமதத்தினரைச் சகிக்குந் தன்மையும் அனுதாபமுமுண்டாகி, பகையும் விரோதமும் பறந்தோடிப்போகும்.

கடைசியாக, நான் பொழிப்புரையாகச் சொல்வதென்னவென்றால், ஒவ்வொரு முன்னேற்றக் கிளர்ச்சிக்கும் அஸ்திவாரமாயிருக்கின்ற கல்விச் செல்வம் நமது சமூகத்திற்கு அத்தியாவசியம் வேண்டும். பாலியர் மாத்திரமன்றி, பாலிகைகளும் கல்வி கற்க வேண்டுவது இன்றியமையாததே. ஒரு தேசத்து ஸ்திரீகள் நிரக்ஷர குக்ஷிகளாயிருந்தால், அத்தேசத்தாரை நாகரிகமானவர்களெனச் சொல்ல ஏதுவில்லை. ஸ்திரீகள் கல்வியற்றவர்களாயிருந்தால், எச்சமூகமாவது முன்னேற்றமடைந்து தன் சமூகக் குறியை ஒட்ட முடியாது. நம் சமூகத்தின் கண்ணுள்ள அறிவீனத்தையும், கல்வியறிவின்மையையும் அகற்றியோட்டிவிடுவதே நமது பிரதம எண்ணமாயிருக்கட்டும். இவ்விஷயத்தைப் பூர்த்தியாக நமது சமூகத்தில் செய்து முடிக்க நமது சமூக நாயகர்கள் தலையெடுத்துத் தகுந்தநிதி சம்பா

திக்கவும், கல்வியறிவை மென்மேலும் விருத்தி செய்யவும் ஆரம்பித்து விட்டார்களென அறிந்து சந்தோஷிக்கிறேன்.

சகோதரர்களே, ஆங்காங்கு நமது சமூகத்தின் யோகக்ஷேமங்களுக்காகவும், நமது தேசத்தின் அபிவிருத்திக்காகவும், நமது சமூகாபிமானிகள் எழும்பி உழைக்கும்போது, நாமெங்கிருந்தாலும் அவர்களைத் தெரிந்து சன்மானித்து, அவர்கள் செய்யும் வேலையைக் கௌரவஞ் செய்து, அவர்களோடு ஐக்கியப்பட்டு உழைக்கவேண்டுவது நமது கடமை. வேறு சமூகப் பட்டங்களைத் தம் பேருக்குச் சேர்த்தெழுதாமல், ஒவ்வொருவரும் தம்பேரோடு யாதவர் என்னும் கௌரவப்பட்டம் சேர்த்துக் கையொப்பமிடக் கோருகிறேன். நம்மால் கூடிய மட்டும் சுதேச வஸ்துக்களை விருத்தி செய்வதும் சுதேச வஸ்துக்களையே சதா உபயோகிப்பதும் நமது கடமையென்பதை நாம் மறந்துபோகாதிருப்போமாக.

கடைசியாக, என் சகோதரர்களே, ஸ்ரீகிருஷ்ணபகவான் மீது முழுநம்பிக்கை வைத்து, நமது சமூகத்தின் யோகக்ஷேம விருத்திக்காகவும், நம்மாலான பிரயத்தனங்களெல்லாம் செய்வோமாக.

உங்கள் அசிரத்தையை உதறிவிடுங்கள்; எனோ தானோ வென்றிராமல், நமது சமூகத்திற்காக உழையுங்கள்; நமக்குச் சதா ஆசீர்வாதமளிக்க நம் கிருஷ்ண பகவான் நம்மோடிருக்கின்றார். அவர் தமது சுய ஜனத்தைக் கைவிடார். அவர் நம்மை ஆசீர்வதிக்கச் சர்வ காலத்திலும் தயாராயிருக்கிறார். விழித்தெழுங்கள்!

---

யாதவகுல வாலிபர்களே! நமது யாதவ வாலிப சங்கத் தலைவரவர்களான டாக்டர் திருவாளர் கோவிந்தராஜுலு யாதவ் அவர்கள் தலைமை வகித்து நிகழ்த்திய இவ்விரிவுரையின் ஈற்றில் அவர் கூறியருளிய "விழித்தெழுங்கள்" என்னும் மேலான வாசகம் நமது யாதவமித்திரன் சந்தாதாரரை 'மூன்றுவதாண்டுச்சந்தாத் தொகையை முன்னதாகவே மணியார்டர் செய்தனுப்பவும் மேலும் மேலும் சந்தாதாரரைச் சேர்த்தனுப்பி நமது மித்திரனை ஆதரிக்கவும்' "விழித்தெழுங்கள்" என்று ஊக்கமளிக்குமென நம்புகிறேன். (ப-ர்.)

சென்னை மாகாண

# 6-வது யாதவ மகாநாடு.

## ஏகமனதாய் நிறைவேறிய தீர்மானங்கள்:—18



1. இந்த மகாநாடு மாட்சிமை தங்கிய இந்தியா சக்ரவர்த்தியவர்களிடம் தனது அன்பையும் ராஜவிஸ்வாஸத்தையும் தெரிவித்துக் கொள்கிறது.

2. இந்த மகாநாடு மேன்மை தங்கிய திருவிதாங்கூர் ரீஜண்டு மஹாராணி அவர்களுக்கும், மஹாராஜா அவர்களுக்கும் தனது அன்பையும் ராஜவிஸ்வாஸத்தையும் தெரிவித்துக் கொள்கிறது.

3. பண்டித மோதிலால் நேரு, மௌலானா முகம்மதலி இவர்கள், தேசத்தின் இடுக்கலான இவ்வேளையில் தேகவியோகமானதற்காக இம்மகாநாடு வருந்துவதோடு அவர் தம் குடும்பத்தார்களுக்கு அனுதாபத்தையும் தெரிவித்துக் கொள்கிறது.

4. இம்மகாநாடு காந்தி—இர்வின் சமாதான ஒப்பந்தத்தை அன்புடன் வரவேற்பதோடு, இனி நடைபெறப்போகும், இரண்டாவது வட்டமேஜை மகாநாடும் நன்மையாக முடிய விரும்புகிறது.

அக்ராசனாதிபதி.

5. சங்கரன் கோவில் தாலூகா மூள்ளிகுளம் யாதவப் பிரமுகர் மகா-ா-ா-ஸ்ரீ சுந்தரக் கோனார் அவர்களும், சென்னை மாகாண 4-வது யாதவ மகாநாட்டு வரவேற்புக் கழகத்தலைவர் திருநெல்வேலி மகா-ா-ா-ஸ்ரீ துரைசாமிக் கோனார் அவர்களும் காலம் சென்றதைக் குறித்து இந்த மகாநாடு வருந்துவதோடு தன் அனுதாபத்தையும் தெரிவித்துக் கொள்கிறது.

டி. கோவிந்ததாஸ், B. A. B. L. பிரேரேபிப்பவர்.

என். பெருமாள் கோனார், முனிசிபல் கவுன்ஸிலர், திருநெல்வேலி. } ஆமோதிப்பவர்.

6. ஜஸ்டிஸ் கட்சித் தலைவர்கள் யாதவகுல மக்களுக்குத் தக்க உதவி செய்யவில்லையென்று சென்ற மகாநாட்டில் கண்டிப்பாய்த் தெரிவித்திருந்தும் இதுவரை யாதொரு உதவியும் செய்யாததை இம்மகாநாடு திரும்பவும் கண்டிப்பதுடன் இனியும் அவ்வாறே யாதவகுல மக்களிடம் அவர்கள் அசிரத்தையாய் இருக்கும்பட்சத்தில் ஜஸ்டிஸ் கட்சியார் யாதவ மக்களின் ஆதரவை இழக்க நேரிடுமென்று இந்த மகாநாடு தெரிவித்துக் கொள்கிறது.

எம். அப்பாத்துரைப் பிள்ளை, சென்னை. } பிரேரேபிப்பவர்.

வி. கிருஷ்ண ரெட்டியார், B. A. B. L. வேலூர். } ஆமோதிப்பவர்.

7. வகுப்புவாரி சர்க்கார் உத்தியோக உத்தரவில் கண்ட பிராமணர் அல்லாதார் தொகுதியில் யாதவர்களுடைய ஜனத் தொகையையும், ஆங்கிலப் படிப்பின் பிற்போக்கையும் கவனித்து உத்தியோகம் வழங்குவதில், அவர்களின் உரிமையை விசேஷமாகக் கவனிக்கவேண்டுமென்று இந்த மகாநாடு சர்க்காரிடம் மன்றாடிக் கேட்டுக்கொள்கிறது.

*E. M.* கோபாலகிருஷ்ணக் கோனார், மதுரை. } பிரேரேபிப்பவர்.

*T. S.* வேணுநாதக் கோன், சென்னை. } ஆமோதிப்பவர்.

8. (a) தென் திருவிதாங்கூரில் உபயோகமுள்ள பல விருக்ஷங்களில்லாத குன்றுகளில் மாடுகளைப் போல் ஆடுகளையும் தடையின்றி மேய்ப்பதற்கு அனுமதிகொடுக்க வேண்டுமென்று திருவிதாங்கூர்கவர்மெண்டாரை இந்த மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

(b) தென் திருவிதாங்கூர் நெற்பயிருக்கு முக்கிய வளத்திற்குக் காரணமாயிருக்கும் வெளி ஆடுகளைச் சவுக்கைகளில் வைத்து, போகும்போதும் வரும்போதும் இலாகா அதிகாரிகளால் செய்யப்படும் தொந்திரவை இம்மகாநாடு கண்டிக்கிறது.

*S.* செல்லம். சுசீந்திரம், பிரேரேபிப்பவர்.

*T. V. M.* கோனார். ஆமோதிப்பவர்.

9. பொருளாதார வளர்ச்சியைக் கருதி சுதேச ஆடைகளை யும், சுதேசப் பொருள்களையும் ஆதரிக்க வேண்டுமென்று எல்லா யாதவ மக்களையும் இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

S. செல்லம். சுசீந்திரம், பிரேரேபிப்பவர்.

S. G. வெங்கிடராமன், கும்பகோணம். } ஆமோதிப்பவர்.

10. யாதவர்களின் முன்னேற்றத்தைக் கருதி ஒவ்வொரு ஜில்லாவிலும் யாதவர் கூட்டுறவு நாணயச் சங்கங்கள் ஏற்படுத்த வேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

T. கோவிந்ததாஸ், B. A. B. L. திருநெல்வேலி. } பிரேரேபிப்பவர்.

அருணாசலக்கோனார், திருநெல்வேலி. } ஆமோதிப்பவர்.

11. (a) ஒவ்வொரு ஜில்லாவிலும் யாதவச் சிறுவர் சிறுமி களுக்குப் பிரதமகல்வி பயிற்றுவிப்பதற்கும், படிப் பற்ற வயதானவர்களுக்கு இராப்பள்ளிக்கூடம் ஏற் படுத்தி யாதவ மக்களின் கல்விக் குறையை நீக்க வேண்டியதற்கும் ஏற்பாடுகள் செய்ய வேண்டு மென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

(b) ஒவ்வொரு ஜில்லாவிலும் உயர்தரப் படிப்பிற்காக, இளைஞர்களுக்கு உதவிச் சம்பளம் அளிப்பதற்கு மூலதனங்கள் ஏற்படுத்தும்படி யாதவ கனவான்களை இந்த மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

J. சக்ரபாணி நம்பியார், B. A. B. L. வைஸ் பிரஸிடெண்டு, டிஸ்டிரிக்ட் போர்டு. திருநெல்வேலி. } பிரேரேபிப்பவர்.

S. ராமசாமிக் கோனார், B. A. B. L. திருநெல்வேலி. } ஆமோதிப்பவர்.

12. சிக்கனத்தை முக்கிய உத்தேசமாகக்கொண்டு மதம் ஆசாரம் என்ற பெயரால் வீண் பொருள் விரையஞ்செய்ய வேண் டாமென்று யாதவ மக்களை இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

பிச்சைமுத்துக் கோனார், மதுரை. பிரேரேபிப்பவர்.

முருகக்கோனார், B. A. மதுரை. ஆமோதிப்பவர்.

13. இம்மகாசங்கம், ஆண்டுதோறும் மகாநாட்டிற்கு வருகின்ற நம் குலப்பெருமக்களில் ஒவ்வொருவரும் நம் சங்க மூலப்பொருள் சேகரத்தின்பொருட்டு அணா 8. வீதம் செலுத்தும்படி அப் பெருமக்களை வேண்டிக் கொள்கிறது.

ஆ. கார்மேகக் கோனார், மதுரை. பிரேரேபிப்பவர்.
பண்டிட். வேணுகோபால் பிள்ளை, சென்னை. } ஆமோதிப்பவர்.

14. யாதவகுல சமூகப் பிரிவுகளுக்குள்ளே கலப்பு விவாகத்தைப் பெருவாரியாக ஆதரிக்க வேண்டுமென்று யாதவ மக்களை இம்மகாநாடு கேட்டுக் கொள்கிறது.

M. K. ஆராவமுது பிள்ளை, சென்னை. பிரேரேபிப்பவர்.
பண்டிட். வேணுகோபால் பிள்ளை, சென்னை. } ஆமோதிப்பவர்.

15. ஜீவகாருண்யமென்ற கொள்கைக்காக மிருக பலியிட்டுக் கடவுளை வணங்கும் கொடிய பழக்கத்தை அறவே விட்டுவிட வேண்டுமென யாதவ மக்களை இம்மகாநாடு வேண்டிக் கொள்கிறது.

J. சக்ரபாணி நம்பியார், B. A. B. L., வைஸ் பிரஸிடெண்டு, டிஸ்டிரிக்ட் போர்டு. திருநெல்வேலி. } பிரேரேபிப்பவர்.
M. நாராயணசாமிக் கோனார், ஆமோதிப்பவர்.

16. யாதவ மக்களுள் வேலையில்லாதவர்களுக்கும் ஓழிவு நேரங்களில் வேலை கொடுப்பதற்கும் நூல் நூற்றல் போன்ற கைத்தொழில்களைப் பரவச்செய்ய வேண்டுமென்று இந்த மகாநாடு தீர்மானிக்கிறது.

T. R. சாரங்கபாணி, M. A. சென்னை. பிரேரேபிப்பவர்.
S. சுப்பிரமணிய கரையாளர், செங்கோட்டை. } ஆமோதிப்பவர்.

17. கிராமம், தாலூகா, ஜில்லாக்கள்தோறும் யாதவ சங்கங்கள் நிறுவி யாதவ முன்னேற்றத்திற்கு வேலை செய்ய வேண்டுமென்று இம்மகாநாடு தீர்மானிக்கிறது.

A. K. கோபாலசாமி } பிரேரேபிப்பவர்.
ஆ. கார்மேகக்கோனார், மதுரை., } ஆமோதிப்பவர்.

18. இந்த மகாநாட்டின் தீர்மானங்களை நிறைவேற்றுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய மகா-ள-ள-ஸ்ரீ N. K. மோஹனரங்கம் பிள்ளை அவர்கள் B. A. B. L-ன் தலைமையின் கீழ் ஓர் நிர்வாக சபை இம்மகாநாடு நியமிக்கிறது.

T. S. வேணுநாதக் கோன், சென்னை. பிரேரேபிப்பவர்.
K. V. ராகவன் பிள்ளை, ஆமோதிப்பவர்.

முற்றிற்று.

# சமுதாயக் கிளர்ச்சிகள்.

## இராமநாதபுரம் ஜில்லா, கோவைசிய யாதவகுல தர்ம பரிபாலன சபை.



இச்சபை முன் இராமநாதபுரம் சப்டிவிஷன் இலாகாவைச் சேர்ந்த இடங்களில் 364 கிராமங்களிலுள்ள வேளுடர் என்ற யாதவர்களால் 1906ஹூ ஆரம்பித்து 1907ஹூ ஆகஸ்டுமீ 1௳ இந்திய கவர்னர் ஜெனரல் இன்கவுன்சிலின் 1860ம் வருஷத்திய 21வது ஆக்டின் நிபந்தனைகளை அனுசரித்து இராமநாதபுரம் சப்டிவிஷன் அபிராமம் கோவைசிய யாதவகுல தர்ம பரிபாலன சபையென்று ஜாயிண்டு ஸ்டாக்கு கம்பேனிகளுக்கு அடிஷனல் ரிஜிஸ்த்தாரர் இடம் ரிஜிஸ்டர் செய்து அங்கிகாரம் செய்யப்பட்டிருந்தது.

இச்சபையின் மானேஜ்மெண்டானது, பிரசிடெண்ட், வைஸ் பிரசிடெண்ட், செக்ரடேரி, 4 சர்க்கிள் இன்ஸ்பெக்டர்கள் 14 சர்க்கிள்தார்கள் ஆக 21 பேர்கொண்ட ஆனரரி கௌன்சிலென்ற நிர்வாக சபையாரால் நடைபெற்று வந்தது.

மத்தியில் சிறிதுகாலம் அங்கத்தினரின் முயற்சிக் குறைவால் க்ஷீணதிசை அடைந்திருந்த இச்சபையானது 1930ஹூ ஜூன்மீ முதல் இதன் அடியில்கண்ட தீர்மானங்களின் பிரகாரம் எல்லா வகுப்பு யாதவர்களும் ஒன்றுசேர்ந்து அதிகமாக நிர்வாகசபை அங்கத்தினர்களை நியமித்து, வகுப்பு வித்தியாசம் பாராட்டாமல் அதி விமரிசையாய் நடைபெற்று வருகிறது.

இராமநாதபுரம் சப்டிவிஷனிலாகா கோவைசிய யாதவகுல தர்ம பரிபாலன சபை.

1930ஹூ ஜூன்மீ 23௳ திங்கட்கிழமை மாலை 3 மணிக்கு ஷை சபை பிரஸிடெண்ட் மகா-ா-ா-ஸ்ரீ ஆயர்பாடிக் கோனாரவர்கள் அக்ராசனத்தின் கீழ், பரம்பக்குடி அனுமார் கோவில் மண்டபத்தில், ஒரு சங்கம்கூடியது. அவ்வமயம் அங்கு கூடிய

ஆஜர் மெம்பர்கள்.

1. மகா-ா-ா-ஸ்ரீ சர்க்கிள் இன்ஸ்பெக்டர். முத்துக்கோனாரவர்கள்
2. ,, சர்க்கிள்தார். முத்தழகுமணியகாரரவர்கள்
3. ,, ,, பிச்சைக் கோனாரவர்கள்
4. ,, ,, சாமி அய்யாக் கோனாரவர்கள்
5. ,, ,, கடம்பவனக் கோனாரவர்கள்
6. ,, ,, இ. கருங்கப்பக் கோனாரவர்கள்
7. ,, ,, கருப்பணக் கோனாரவர்கள்
8. ,, வைஸ்பிரசிடெண்டு ஆறுமுகம்பிள்ளை யவர்களுக்காக பிராக்ஸி மூலம் பவர்பெற்ற கஞ்சக் கோனாரவர்கள்
9. ,, ,, சேதுபிள்ளையவர்கள்
10. ,, ,, குப்புசாமிக் கோனாரவர்கள்

## விஷயம்.

செம்பொன்குடியிலுள்ள ஹெட்டாபீஸானது ஷை செம்பொன்குடிக்குக் கிராமமாகவும் கார் ரயில் சர்வீஸ் இல்லாத ஊராகவும் மெம்பர்களுக்கு வரத்துப் போக்குக்கு சௌகரியமில்லாத ஊராகவும் இருப்பதினால், முன், ஸ்தாபிக்கப்பட்டிருந்த அபிராமத்துக்கே ஷை ஹெட்டாபீஸை மாற்றப்பட வேணுமென்று அனேக மெம்பர்கள் அபிப்பிராயப்பட்டு, சர்க்கிள் இன்ஸ்பெக்டர் முத்துக் கோனாரவர்கள் வகையறு ரிப்போர்ட்டு செய்திருந்து அதை வாசிக்கலாயிற்று.

## புரோஸீட்டிங்ஸ் தீர்மானம்.

1. ஷை ரிப்போர்ட்டுப்படி ஷை செம்பொன்குடியிலிருக்கும் ஹெட்டாபீஸை அபிராமத்துக்கு மாற்றிவைக்கும்படிக்கு ஏகோபித்துத் தீர்மானிக்கலாயிற்று.

2. இந்த சபை கல்வி முதலிய அபிவிர்த்தி செய்யவும் பண்டுக்குப் பணவசூல் வகையறு செய்து பண்டு சேர்க்கவும் ஜாதி ஆசாரம், விவகாரம், ஒழுக்கம், மதக்கொள்கை முதலியவைகளில் யாதவ குல ஜனங்களுக்கு சன்மார்க்கத்தைப் போதித்துச் சபையை அபிவிர்த்தி செய்வதற்கு நிர்வாகசபை கவுன்சில் மெம்பர்கள், கவுன்சில் உத்தியோகஸ்தர்கள் போதாமலிருப்பதாலும், சில மெம்பர்கள் ரங்கூன் வகையறு இடங்களுக்குப் போயிருப்பதாலும், சிலர் காலம்

சென்றுவிட்டதாலும் அவர்களுக்குப் பதில் மியமுகத்திற்கு இந ணடியில் கண்டிருக்கிறவர்களை நிர்வாகசபைக்கவுன்சில் மெம்பர்களாகச் சேர்க்கும்படி தீர்மானிக்கலாயிற்று.

## இனங்கள்.

| | | |
|---|---|---|
| 1. | மகா-௱-௱-ஸ்ரீ ஆ. பெருமாள்கோனாவர்கள் | செம்பொன்குடி |
| 2. | வெ. வே. ராமசாமிக் கோனாவர்கள் | அபிராமம் |
| 3. | ஆ. காளிமுத்துக் கோன் | ஆரம்பக்கோட்டை |
| 4. | சிங்கனக் கோன் | மெய்யனேந்தல் |
| 5. | ஆ. புலியர்க் கோன் | காடடார்ந்தகுடி |
| 6. | ராமுக் கோன் | வருந்தி |
| 7. | ராமசாமிக் கோன் | அளகன்குளம் |
| 8. | மாரியப்பக் கோன் | ஷையூர் |
| 9. | ஆ. குமராண்டிக் கோன் | இராமநாதபுரம் கோட்டைவாயில் |
| 10 | பெரியதம்பிக் கோன் | தங்கச்சிமடம் |
| 11. | முருகக் கோன் | வண்ணான்குண்டு |
| 12. | ராமுக் கோன் | காரான் |
| 13. | காயாம்புக் கோன் | காஞ்சரங்குடி |
| 14. | கணக்கு பெரியகருப்பக் கோன் | எருமைப்பட்டி |
| 15. | ரெங்குக் கோன் | போகலூர் |
| 16. | குருந்தப்பக் கோன் | உத்திரகோசமங்கை |
| 17. | சாத்தையாக் கோன் | புத்தூர் |
| 18. | சாத்தப்பக் கோன் | பூவத்தூர் |
| 19. | தங்கச்சாமிக் கோன் | ரெகுநாதபுரம் |
| 20. | முத்துக் கோனார் | தவளைக்குளம் |
| 21. | பள்ளிக்கூடத்துக் கோன் | மீசல் |
| 22. | பக்கிரிக் கோன் | பூக்குளம் |
| 23. | பெ. முத்துக்காமாட்சிக் கோன் | க. கருங்குளம் |
| 24. | கருப்பணக் கோன் | விளத்தூர் |
| 25. | ராமலிங்கக் கோன் | தருகம்மல் |
| 26. | பழனியாண்டிக் கோன் | பெரும்பச்சேரி |
| 27. | பதினெட்டாம்படிக் கோன் | பொதிகுளம் |
| 28. | நா. ஆறுமுகக் கோன் | முத்துராமலிங்கபுரம் |
| 29. | உலகப்பக் கோன் | சிறுவயல் |
| 30. | பூசாரி சோணமுத்துக் கோன் | மேலப்பனையூர் |

3. இதில் கண்ட அபிராமம் வெ. வே. ராமசாமிக்கோனாரவர்களை ஆனரரி செக்ரட்டேரி அண்டு டிரஷரராக நியமுகம்செய்யும்படி தீர்மானிக்கலாயிற்று.

4. வைஸ் பிரசிடெண்டு டிரஷரார் அண்டு செக்ரட்டேரி ஆறுமுகம் பிள்ளை யவர்கள் விர்த்தாப்பிய திசையடைந்து வேலை பார்க்க சக்தியில்லாத நிலைமையாயிருப்பதால் டிரஷரார் அண்டு செக்ரட்டேரி வேலைகளை ஷை யாரவர்கள் அபிராமம் வெ. வே. ராமசாமிக் கோனாரவர்களிடம் ஒப்பிவிக்கும்படிக்கும் தீர்மானிக்கலாயிற்று.

5. ஷை செம்பொன்குடியி லிருக்கிற ஆபீஸ் ரிக்கார்டு முதலியவைகளையும், ஆபீசுக்குச் சம்மந்தப்பட்ட பிரோவகையரு ஆபீஸ் சாமான்களையும் முன்னேற்பட்டிருக்கிற வவுச்சர் பிரகாரம் மேல்கண்டபடி நியமிக்கப்பட்டிருக்கிற அபிராமம் ஆனரரி செக்ரட்டேரி வெ. வே. ராமசாமிக் கோனாரவர்கள் வசம் ஒப்பிவிக்கும்படி தீர்மானிக்கலாயிற்று.

6. மகா-ள-ள-ஸ்ரீ ஜாயிண்ட்டு ஸ்டாக் கம்பெனியா ரவர்களுக்கு 1928 1929 ஹ்ங்களின் சபையின் நிர்வாக மெம்பர்களின் ஜாப்தா. ரூல்ஸ் 38-வது பாராவில் சொல்லியிருக்கிறபடி அனுப்பிவைக்கும்படிக்கும் தீர்மானிக்கலாயிற்று.

7. ஷை சபைக்கு இராமநாதபுரம் சப்டிவிஷனிலாகாவென்று பவுண்டரி ஏற்பட்டிருப்பதை மாற்றி இராமநாதபுரம் டிஸ்ட்டிரிக்டு பூராவையும் பவுண்டரியாய் ஏற்படுத்தியும் இந்தச்சபைக்குக் கிளைச்சபையாகவேண்டிய இடங்களில் சபை ஏற்படுத்திக்கொள்கிறதென்றும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

ஆயர்பாடிக் கோனார்,
பிரசிடெண்ட்.

# வருஷாந்தர ஜெனரல் மீட்டிங்.

இராமநாதபுரம் டிஸ்ட்ரிக்ட் கோனைகிய யாதவகுல தர்மபரிபாலன சபை அபிராமம் ஹெட்டாபீஸ்.

1931ஞ மேயீ 9உ பிரசோற்பத்திஞ சித்திரையீ 26உ சனிக்கிழமை பகல் 2-மணிக்குப் பரமக்குடி யாதவஸ்கூலில் பொதுக் கூட்டம் ஷை சபை பிரசிடெண்ட் மகா-ள-ள-ஸ்ரீ ஆயர்பாடிக் கோனுரவர்கள் அக்கிராசனத்தின்கீழ்.

14 மெம்பர்கள் ஆஜராகி இருந்தார்கள்.

## புரோஸீடிங்ஸ் தீர்மானம்.

1\. இந்தச்சபைக்குமுன் ஏற்பட்ட 14 சர்கிள்களில் மாடக்கொட்டான் சர்க்கிள் 1. நல்லிருக்கை சர்கிள் 2. சிறுபோது சர்க்கிள் 3. இந்த மூன்று சர்க்கிள்களையும் ரத்துசெய்து அந்த சர்க்கிள்தார்கள் வேலைபார்க்கத் தகுதியற்றவர்களாகவிருப்பதால் கவுன்சில் மெம்பர் ஸ்தானத்தையும் ரத்துசெய்தும் இதனடியில் கண்ட சர்க்கிள்களை ஜாஸ்தி செய்யப்பட்டிருக்கிறது.

| | | |
|---|---|---|
| 1. | தங்கச்சிமடம் சர்க்கிள் | பெரியதம்பிக் கோனுரையும் |
| 2. | அழகன்குளத்துக்கு | நாகலிங்கக் கோனுரையும் |
| 3. | தேர்போகிக்கு | நாகுக் கோனுரையும் |
| 4. | ரெகுநாதபுரத்துக்கு | ரா. தங்கசாமிக் கோனுரையும் |
| 5. | வண்ணான்குண்டுக்கு | முருகக் கோனுரையும் |
| 6. | இராமநாட் வெளிப் பட்டணத்துக்கு | வடிவேலுக் கோனுரையும் |
| 7. | காரேந்தலுக்கு | குப்புசாமி பிள்ளையையும் |
| 8. | எருமைப்பட்டிக்கு | தா.பெ.பொன்னையாபிள்ளையையும் |
| 9. | ஆட்டாங்குடிக்கு | கண்ணாரம் பிள்ளையையும் |
| 10. | கட்டிவயலுக்கு | திருந்தாக் கோனுரையும் |
| 11. | கட்டாம்புளிக்கு | சுந்தரக் கோனுரையும் |
| 12. | வருந்திக்கு | ராமுக் கோனுரையும் |
| 13. | செவ்வூருக்கு | ராமுக் கோனுரையும் |

14. தேரிருவேலிக்கு நா. முனியாண்டிக்கோனாரையும்
15. களக்குடிக்கு கருங்கப்பக்கோனாரையும்
16. இதம்பாடலுக்கு முனியாண்டிப் பிள்ளையையும்
17. செல்வநாயகபுரத்துக்கு முத்தணக்கோனாரையும்
18. உடகுளத்துக்கு செ. பெரியகருப்பக்கோனாரையும்
19. நெடுங்குளத்துக்கு' அங்கப்பக்கோனாரையும்
20. சிறுகுடிக்கு உடையப்பக்கோனாரையும்

முன் ஏற்பட்டிருந்த சர்க்கிள் 14ல் மேல்கண்டபடி ரத்துச்செய்த சர்க்கிள் 3 நீக்கி சர்க்கிள் 11 உடன் மேல்கண்டபடி புதிதாய் நிய மிக்கப்பட்டிருக்கிற சர்க்கிள் 20ம் ஆகச் சர்க்கிள் 31 ஆக ஏற் பட்டிருக்கிறதையும்.

3. புத்தூர் சர்க்கிள் மகா-ள-ள-ஸ்ரீ அரியமுத்துக் கோனார் காலஞ்சென்று அந்தஸ்தானத்துக்கு ஷையூர் சாத்தையாக் கோனாரை நியமித்தும் பூவலத்தூர் சர்க்கிள்தார் மகா-ள-ள-ஸ்ரீ அழகர்கோனார் காலஞ்சென்று அந்தஸ்தானத்துக்கு ஷையார் மகன் சாத்தப்பக் கோனாரை நியமித்தும் க. கருங்குளம் சர்க்கிள்தார் மகா-ள-ள-ஸ்ரீ விளாங்கார்கோனார் காலஞ்சென்று அந்தஸ்தானத் துக்கு ஷையூர் கிழவக்கோனாரையும் நியமித்தும் பிசல் சர்க்கிள்தார் மகா-ள-ள-ஸ்ரீ நாகலிங்கக்கோனார் காலஞ்சென்று அந்தஸ்தானத் துக்கு ஷையூர் பள்ளிக்கூடத்துக்கோனாரை நியமித்திருக்கிறதையும் செம்பொன்குடி மகா-ள-ள-ஸ்ரீ வைஸ்பிரசிடெண்ட் ஆறுமுகம் பிள்ளையவர்கள் காலஞ்சென்று அந்தஸ்தானத்துக்கு ஷையார்மகன் பெருமாள்க்கோனாரவர்களை நியமித்தும் தவளைக்குளம் சர்க்கிள் கடம்பவனக்கோனாரவர்கள் விருத்தாப்பிய திசையையடைந்து விட்டபடியால் அந்தஸ்தானத்துக்கு ஷையார் மகன் முத்துக் கோனாரை நியமிக்கப்பட்டிருப்பதையும் 1930ஷு ஜூன்மீ 23உ கூடிய கவுன்ஸில் 39-வது மீட்டிங்கில் தெரிந்தெடுக்கப்பட்ட கவுன் சில்மெம்பர்களில் ஆரம்பக்கோட்டை காளிமுத்துக்கோனார்: அழகன்குளம் ராமசாமிக்கோனார் ஷையூர் மாரியப்பக்கோனார் ராமநாதபுரம் குமராண்டிக்கோனார் காரான் ராமுக்கோனார் எருமைப்பட்டி பெரியகருப்பக்கோனார் போகலூர் ரெங்கக்கோனார் உத்தரகோசமங்கை குருந்தப்பக்கோனார் கருங்குளம் முத்துக் காமாக்ஷிக் கோனார், முத்துராமலிங்கபுரம் ஆறுமுகக் கோனார் ஆக இந்தப்பத்துப்பேர்களும் சபைக்குவேண்டிய முயற்சி எடுத்துக்

கொள்ள தகுதியற்றவர்களாகவிருப்பதால் கவுன்சில் மெம்பர் ஸ்தானத்தைவிட்டு விலக்கப்பட்டிருப்பதையும் நிர்வாகசபை அங்கத்தினர்களான கவுன்சில் மெம்பர்களாக 51 (அன்பத்தொன்று) பேர்களை நியமுகம் செய்யப்பட்டிருப்பதை அங்கிகரித்தும்.

4. சர்க்கிள்களுக்குக்கிராமங்களைச் சேர்க்கைசெய்யப்பட்டிருப்பதையும் 23—6—30ல் 39-வது கவுன்சில் மீட்டிங்கில் செம்பொன்குடியிலிருக்கிற சபையின் ஆபிசை முன் ஏற்பட்டபடி அபிராமத்துக்கு மாற்றியிருப்பதையும் அங்கிகரித்தும்.

5. கவுன்சில் மெம்பர்களைக்குறைத்தும் கூட்டியிருப்பதையும் அங்கிகரித்து ஷை விஷயங்களை ரிஜிஸ்தாரவர்களுக்குத் தெரியப்படுத்தும்படிக்குச் செய்த தீர்மானத்தை அங்கிகரித்தும்.

6. சபைக்குப் பண்டுக்காக மெம்பர்களிடம் சந்தாத்தொகையையும் வசூல்செய்யும்படிசெய்த தீர்மானத்தையும் அங்கிகரித்தும்.

7. நம் யாதவச் சிறுவர்களுக்குக் கல்விப்போதனைசெய்யக் கிராமங்கள்தோறும் பள்ளிக்கூடம் ஏற்படுத்தும்படி செய்த தீர்மானத்தை அங்கிகரித்தும் சபை வருஷாந்திர பாலன்ஸ் சீட்டையும் அங்கிகரித்துமிருக்கிறது.

8. எல்லாவகுப்பு யாதவர்களும் வகுப்புவரிசையாகப் பேசாமல் ஒரே வகுப்பினராய் சமத்துவமாய் ஒற்றுமையா யிருக்க வேண்டுமென்ற தீர்மானத்தை அங்கிகரித்தும்,

9. நமது யாதவர்களுடைய ஆசாரத்தை அபிவிருத்திசெய்யும்பொருட்டு (18—7—30) பிரமோதூத ஹூ ஆடிமீ 3௳ நமது சபையின் சார்பாக மதுரை தல்லாகுளம் ஸ்ரீவெங்கடாசலபதி பெருமாள் சன்னதிமுன்னிலையில் மகா-௱-௱-ஸ்ரீ மதுரை P. பிச்சைமுத்துக் கோனாரவர்கள் அக்ராசனத்தின்கீழ் கூடிய சபையில் ஏற்பட்ட தீர்மானத்துக்கு விரோதமாக நடந்தவர்கள் மேல் ஆக்ஷன் எடுத்துக்கொள்ள வேண்டுமென்ற தீர்மானத்தை அங்கிகரித்தும் ஆஜர் மேல்கண்ட கவுன்சில் மெம்பர்களாலும், சந்தா மெம்பர்களாலும் அனுபந்த லிஸ்டில் கண்ட சந்தா மெம்பர்கள் அனைவராலும் ஏகோபித்து அங்கிகாரம் செய்து ஆமோதிக்கப்பட்டிருக்கிறது.

ஷெ விஷயங்களை ஆஜர் மேற்கண்ட கவுன்சில் மெம்பர்களாலும் சந்தா மெம்பர்களாலும் அனுபந்த லிஸ்டில் கண்ட சந்தா மெம்பர்களாலும் ஏகோபித்துத் தீர்மானிக்கப்பட்டிருப்பதை அங்கீகாரம் செய்து ஸ்திரம்செய்யப்பட்டிருக்கிறது.

ஆயர்பாடிக் கோனார்,
பிரசிடெண்ட்.

## யாதவர் இளைஞர் சங்கம் நாகை.

நாகை யாதவர்கள் பலர் 14-4-31 மாலை 5 மணிக்கு மதுவிலக்குக் கமிட்டி ஆபீசில் ஒரு பொதுக்கூட்டம் நடத்தி ஒரு யாதவ இளைஞர் சங்கத்தை ஏற்படுத்தினார்கள். திரு. N. S. கந்தசாமி பிள்ளை அவர்கள் அக்கிராசனம் வகித்தார். நாகையிலிருந்தும் பல கிராமங்களிலிருந்தும் அநேக யாதவர்கள் விஜயம் செய்தார்கள். கூட்டத்தில் யாதவர்களின் தற்காலத்தின் தாழ்ந்த நிலைமைக்குக் காரணத்தை விளக்கி முன்னேற்றத்திற்குரிய சாதனங்களை நன்கு எடுத்துச் சொல்லப்பட்டது. மேற்படி சங்கத்திற்கு முறையே திரு. A. K. கோபால்சாமி பிள்ளை அவர்களைத் தலைவராகவும் திரு. K. குப்புசாமி பிள்ளை அவர்களை உபதலைவராகவும், திரு. T. M. இராஜகோபால் பிள்ளை அவர்களை காரியதரிசியாகவும் நியமனஞ் செய்யப்பட்டுப் பின்பு சங்கசம்பந்தமான பல தீர்மானங்கள் முறையே நிறைவேறப்பட்டுள்ளன.

T. M. இராஜகோபால் பிள்ளை,
காரியதரிசி.

22-4-31ல் மேற்படி சங்கத்தின் நிர்வாக கமிட்டியின் கூட்டம் நடைபெற்றது. சங்கத்தை நடத்துவதற்கு அனுஷ்டிக்கவேண்டிய விதிகள் வாசிக்கப்பட்டு மெம்பர்கள் ஆலோசனைக்காக அடுத்த மீட்டிங்குக்கு ஒத்திவைக்கப்பட்டன. புதிதாக அங்கத்தினர்களைச் சேர்க்க அச்சிட்டவேண்டுகோளை எல்லாக் கிராமங்களுக்கும் அனுப்பிப் பிரசாரம்செய்வதென்று தீர்மானம் நிறைவேறியது. சங்கத்திற்குப் புதிதாக திரு. K. துரைசாமி பிள்ளை B. A. L. T. அவர்கள் ஒரு உபதலைவராகவும், நிர்வாக கமிட்டியில் திரு. J. நாராயணசாமி பிள்ளை ஒரு மெம்பராகவும் நியமிக்கப் பட்டனர். சென்னையில் வெளியிடப்படும் "யங் யாதவா" என்ற ஒரு புதிய மாதாந்தப் பத்திரிகைக்கு ஆசிரியர்களாக இருந்து தொண்டுசெய்ய முன் வந்திருக்கும் உயர்

திரு. T. S. வேணுநாதக் கோன் F. C. I., M. R. A. S. அவர்களுக்கும் உயர்திரு. தீனதயாளு நாயுடு, B. A. B. L. அவர்களுக்கும் அவர்களின் கைங்கரியத்திற்காக வந்தனம் அளிக்கப்பட்டு கூட்டம் இனிது கலேந்தது.

T. M. இராஜகோபால் பிள்ளை,
காரியதரிசி.

3—5—31 மேற்சொன்ன சங்கத்தின் ஆதாவில் 3—5—31 மாலே 4-மணிக்கு கீவளுருக்குச் சமீபமாக இருக்கும் கோகூர் சத்திரத்தில் யாதவ பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. அக்கூட்டத்திற்கு ஒக்கூர், கோகூர், ஆனமங்கலம், மஞ்சவாடி ஆனமாஹானம், விளாம்பாக்கம், கடம்பங்குடி, காரதாகுடி முதலிய கிராமங்களிலிருந்து அநேக யாதவர் விஜயம் செய்தார்கள்.

நாகையிலிருந்து திரு A. K. கோபால்சாமி பிள்ளை அவர்களும் திரு T. M. இராஜகோபால் பிள்ளை அவர்களும் கீவளூரிலிருந்து திரு கோதண்டராமபிள்ளை அவர்களும் சென்று யாதவ சமூக முன்னேற்றத்தைப் பற்றித் தெளிவாகவும் உருக்கமாகவும் பேசிச் சங்கத்தின் நோக்கங்களை எடுத்துச் சொன்னார்கள். விஜயம் செய்தவர்களில் அநேகர் அங்கத்தினராகச் சேர்ந்து கொண்டார்கள். கூட்டம் நன்கு நடைபெற்று இரவு 8-மணிக்குக் கலேந்தது.

M. ராஜகோபாலன்,
செகரெடரி.

## குறிப்பு.

8—5—31 மாலே 6-மணிக்கு நாகை யாதவ இளைஞர் சங்கத்து நிர்வாககமிட்டியாரின் கூட்டம் நடைபெற்றது. சங்கத்தின் கணக்குகள் பரிசீலனை செய்யப்பட்டு அங்கீகரிக்கப்பட்டன. சங்கத்தை நடத்திவர விதிகள் ஊர்ஜிதம் செய்யப்பட்டன. நாளது மேமீ 13வ செங்கோட்டையில் நடைபெறும் மாகாண யாதவ மகாநாட்டிற்கு 5 அங்கத்தினர்களைப் பிரதிநிதிகளாக அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது. நாகைத் தாலூகா போர்டு ஆதீனத்தில் நடைபெறும் 70 பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் ஏழை யாதவ மாணுக்கர்களுக்குப் புஸ்தகங்களும் இதர உபகரணங்களும் சங்கத்தின் நிதியிலிருந்து இலவசமாகக் கொடுத்து உதவி செய்வதென்ற ஒரு முக்கியமான தீர்மானம் நிறைவேற்றப் பட்டபின் கூட்டம் கலேந்தது.

## இரங்கோன் யாதவ வாலிபர் போதுக்கூட்டம்!

இரங்கோன் சிக்கேமவுந்தாலே ரோட்டு 349ம் நெம்பர் இல்லத்தில் அபிராமம் அகத்தாரிருப்பு யாதவர் வாலிபர் சங்கத்தின் சார்பாக 1931௵ மேமீ 30ந் தேதி இரவு 8-30 மணிக்குப் பொதுக் கூட்டமொன்று திரு ந. முத்தையாக்கோனாவர்கள் தலைமையில் கூடிற்று. அவ்வமயம் திரு கி. வே. பொன்னையாக்கோனார்,. சங்க நிதியும் அதன் பலனும்'' என்னும் விஷயம் பற்றியும் திரு ஆ. நா. நாகலிங்கக்கோனார் "ஒற்றுமை'' என்னும் விஷயம் பற்றியும் பேசிய பின்னர் கீழ்க் கண்ட தீர்மானங்கள் நிறைவேற்றப் பெற்றன.

1-நமது அபிராமம் அகத்தாரிருப்பு யாதவ வாலிபர் சங்கத்திற்கு 18 வயதுக்கு மேற்பட்ட வாலிபர்களான ஒவ்வொருவரும் அங்கத்தினராக அவசியம் சேரவேண்டும்.

2. இச் சங்கத்தின் வாலிபர்கள் மாதாந்தரம் ஒரு முறையோ இரு முறையோ கூட்டம் கூடி நமது ஊர் பெரியார்களையும் அழைப்பித்துச் சமூக வாலிபர் முன்னேற்றத்திற்குரிய சகல ஏதுக்களும் செய்தல் வேண்டும்.

3. சங்கக் கட்டிடம் அடுத்த ஆண்டுக்குள் முடிக்க வேண்டியதிருப்பதால் பெரியோர்களும் வாலிபர்களும் பண உதவி செய்து ஷை கட்டிடத்தைப் பூர்த்தி செய்து வைக்குமாறு கேட்டுக் கொள்ளப்படுகிறது.

திருவாளர்களான

| | | |
|---|---|---|
| ந. முத்தையாக்கோனார் | ரூ. | 21—0—0 |
| ஆ. தெ. நா நாராயணக்கோனார். | ரூ. | 17—0—0 |
| கி. வே. பொன்னையாக்கோனார் | ரூ. | 16—0—0 |
| ஆ. வெ. ராம நாராயணக்கோனார் | ரூ. | 15—0—0 |
| கி. ஆ. நாராயணக்கோனார் | ரூ. | 15—0—0 |
| நா. கு. இராமசாமிக்கோனார் | ரூ. | 15—0—0 |
| ஆ. நா. நாகலிங்கக்கோனார் | ரூ. | 11—0—0 |
| த. கி. நாராயணக்கோனார் | ரூ. | 11—0—0 |
| ராம. சிங்கணக்கோனார் | ரூ. | 11—0—0 |
| நா. அ. இராமச்சந்திரக்கோனார் | ரூ. | 9—0—0 |
| ஆ. ராமக்கிருஷ்ணக்கோனார் | ரூ. | 7—8— |

| | | |
|---|---|---|
| ந. இராமசாமிக்கோனார் | ரூ | 7—0—0 |
| சா. வே. ராம. பெரியகருப்பக்கோனார் | ரூ. | 5—0—0 |
| கூ. கிருஷ்ணக்கோனார் | ரூ. | 5—0—0 |
| ஆ. வெ. ராம. ராமசாமிக்கோனார் | ரூ | 5—0—0 |
| நா. வேலுக்கோனார் | ரூ. | 3—0—0 |
| ஆ. மொ. நா. நாராயணக்கோனார் | ரூ. | 3—0—0 |
| | ஆக மொத்தம் ரூ. | 166—8—0 |

வும் சந்தோஷமாக நன் கொடையளிக்க வாக்களித்தமையால் இச் சங்கத்தினர் அன்னார்களுக்கு என்றும் நன்றி பாராட்டக் கடமைப் பட்டிருக்கின்றனர்.

சபாநாயகர் முடிவுரைக்குப் பின் அனைவர்க்கும் வாழ்த்து கூறப்பட்டுக் கூட்டம் இனிது 11-30 மணிக்குக் கலைந்ததெனக் காரிய தரிசி நா. கு. இராமசாமிக்கோன் எழுதுகிறார்.

---

## தஞ்சை யாதவர் சங்கம்.

7—6—31 ஞாயிற்றுக்கிழமை தஞ்சாவூர் கோட்டையில் இச் சங்கத்தின் நிர்வாகசபையினர்கள் கூட்டம் ஒன்று நடைபெற்றது.

கீழ்க்கண்ட திருவாளர்கள் நிர்வாகசபையின் அலுவலாளர் களாகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள்.

தலைவர்:— A. வாசுதேவ பிள்ளையவர்கள்
உபதலைவர்கள்:— T. P. கந்தசாமி பிள்ளையவர்கள்
,, ,, :— M. R. தியாகராஜ பிள்ளையவர்கள்
காரியதரிசி:— R. லெக்ஷிமிநாராயண பிள்ளையவர்கள்
உபகாரியதரிசிகள்:— T. A. பொன்னுசாமி பிள்ளையவர்கள்
,, ,, :— G. கந்தசாமி பிள்ளையவர்கள்
பொருளாளர்:— T. N. கோபால்சாமி பிள்ளையவர்கள்

R. லெக்ஷிமிநாராயணன்.
காரியதரிசிகள்.

5—7—31 ஞாயிற்றுக்கிழமை காலை 8-மணிக்கு இச்சங்கத்தின் நிறைவேற்றுக் கழகக்கூட்டம் கூடி அடியிற்கண்ட விஷயங்களைத் தீர்மானிக்கலாயிற்று.

1. சங்கம் ரிஜிஸ்டர் செய்வதைப்பற்றிப் பின்னால் யோஜித்துக் கொள்வதெனவும்;

2. சங்க சட்ட திட்டங்கள் (ரூல்ஸ் 1000 காப்பிகள்.) அச்சிடல் அவசியமெனவும்;

3. 1—3—31 முதல் 7—6—31 முடிய உள்ள வரவு செலவுகளும் 13—6—31 முதல் 5—7—31 வரை வரவு செலவுகளும் அங்கீகரிக்கப்பட்டும்;

4. சங்கத்திற்கு வாடகைக்கு வாங்கியிருந்த கட்டடத்தை 13—7—31 தேதியோடு காலிசெய்துவிடுவதெனவும், நிறைவேற்றுக்கழக அங்கத்தினராகிய திருவாளர் கோ. வெங்கடாசலம்பிள்ளையவர்களுடைய தெற்குவீதியிலுள்ள கொட்டகையில் சங்கத்தை வைத்து நடத்திவருவதெனவும்; ஷை கொட்டகையை வாடகையில்லாமல் கொடுத்துதவியதற்காகத் திருவாளர் கோ. வெங்கடாசலம் பிள்ளையவர்களுக்கு இச்சங்கம் மனமார்ந்த நன்றியைச் செலுத்துகிறதெனவும்.

5. சங்கத்தில் வசூலாகும் தொகையிலிருந்து யாதவச் சிறுவர்களுக்கு (எலிமெண்டரி எடுகேஷன்) படிப்புவிஷயமாக மாதம் ஒன்றுக்கு ரூபாய் ஐந்துக்கு மேற்படாமல் செலவுசெய்து வருவதெனவும்;

6. 1-முதல் 116 முடிய உள்ள உறுப்பினர்கள் பட்டியலில் கண்ட திருவாளர்கள் சங்கத்தின் அங்கத்தினர்களெனவும் அங்கீகரித்தும் தீர்மானங்களாயின.

(Sd.) A. வாசுதேவ பிள்ளை, அவர்கள்.
பிரசிடெண்ட்,
5—7—31.

## கிளைச் சங்க ஸ்தாபனம்.

### தலைவர்களின் சுற்றுப் பிரயாணம்.



நமது 6-வது யாதவமகாநாடு செங்கோட்டையில் நடை பெற்ற உடனே மேமீ 19-ஆம் தேதி பாளையங்கோட்டையில் சென்னை, ஸ்ரீயதுகுல மகாசங்க காரியதரிசியும், சென்னை யாதவ வாலிப சங்கத்தின் உபதலைவருமான திருவாளர் எம். கே. ஆராவமுது பிள்ளை M. R. A. S., சென்னை யாதவ வாலிப சங்கத்தின் தலைவரான திருவாளர் தி. சா. வேணுநாதக்கோன் F. C. I. M. R. A. S. செங்கோட்டை இரண்டாவது யாதவ வாலிப சங்கமகாநாட்டுக்குத் தலைமை வகித்த பெஜவாடா திருவாளர் டாக்டர் டி. கோவிந்த ராஜுலு யாதவ், சென்னை யாதவ வாலிப சங்கத்தின் உபதலைவருமான திருவாளர் டி ஆர். சாரங்கபாணி பிள்ளை M. A. திருவாளர் கி. வி. திருவேங்கடம் பிள்ளை திருவாளர் வி. சி. ரங்கபாஷ்யம் நாயுடு, திருவாளர் துரைசாமிபிள்ளை திருவாளர் ஜனார்த்தனம் நாயுடு இவர்கள் யாவரும் பாளையங்கோட்டையில் உள்ள யாதவர்களோடுகலந்து ஒரு வாலிப சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. இன்னும் திருநெல்வேலி, வைஸ் பிரசிடெண்ட், டிஸ்டிரிக்ட் போர்ட், திருவாளர் ஜெ. சக்கரபாணி நம்பியார் B. A. B. L ஆட்வகேட், அவரும் இச்சங்க ஸ்தாபனத்திற்கு ஒரு காரணமாயிருந்தார்.

அன்று சென்னை யாதவ தலைவர்களுக்குத் திருவாளர் சி. அழகிரிசாமி நாயுடு அவர்கள், முன்சிபல் சேர்மன், திருநெல்வேலி, தன் திருமாளிகையில் விமரிசையான ஓர் விருந்தளித்தார்.

இரண்டாவது யாதவ வாலிப கிளைச்சங்கம் திருவாளர்கள் பெருமாள்கோனார், இருளப்பக்கோனார், கோபால்கோனார் இவர்களின் ஊக்கத்தால் ஸ்ரீவள்ளிப்புத்தூரில் ஓர் சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது. கேதுநாராயணபுரம், கூமாபட்டியிலுள்ள யாதவர்கள் தலைவர்களை மேளதாளத்துடன் மோட்டாரில் ஊர்வலம் நடத்தி வந்தனுபசாரங்கூறி, மாலைகள் சூட்டப்பெற்றுப் பின்பு தலைவர்கள் குலத்தின் தற்காலநிலை முன்னேறுதற்கேற்ற பிரயத்தனங்கள் முதலிய விஷயங்களைப்பற்றி விரிவாய்ப் பேசினார்கள்.

மூன்றாவது புதுக்கோட்டையில் 25தேதி மாலை திருவாளர் ச. ஆர். சீனுவாசப் பிள்ளை அவர்கள் தலைமையின்கீழ் 'புதுக் கோட்டை யதுகுல சங்கம்' ஸ்தாபிக்கப்பட்டது. அச்சமயம் வந் திருந்தவர்களின் முக்கியமானவர்கள் திருவாளர்கள் எஸ். ஜி. வெங்கடராமக்கோன், என். ராமசாமிக்கோன், ஆர். கோவிந்த சாமிபிள்ளை, டி ராதாகிருஷ்ண பிள்ளை, எஸ். வாசுதேவபிள்ளை, எம். கணபதி, எம். கோவிந்தசாமி, ஜி. வேணுகோபால் பிள்ளை, முதலியோராவர். அன்னோர் குலாபிமானம் பாராட்டற்பாலது.

புதுச்சேரி சங்கத்தின் ஆதரவின்கீழ் திருவாளர் எம். கே. ஆராவமுது பிள்ளை அவர்கள் யாதவமகாநாட்டின் வரலாறு மகா நாடுகளால் நமது குலத்துக்குண்டாகும் நன்மைகள், சங்கத்தின் கொள்கைகளையும், உபயோகங்களையும், கல்வியின் விருத்தியும், நம் குலம் முன்னேற்றமடையவேண்டிய முயற்சியையும், விரி வாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்தார். கூட்டத்திற்கு வந்திருந்த யாதவர்கள் யாவர்களும் மிக்க மகிழ்ச்சியோடு, கூட்டம் இனிது முடிந்தது. பிறகு, மற்றொருகூட்டம் மேற்படி சங்கத்தின் ஆதர வின்கீழ் திருவாளர் தி. சா. வேணுநாதக்கோன், திருவாளர் டி. ஆர். சாரங்கபாணிப் பிள்ளை இவர்கள் யாதவமக்கள் முன்னேற்றமடையும் விஷயமாகப் பல பிரசங்கங்களும் நடந்தேறின. இவைபோன்ற பிர சங்கங்கள் அடிக்கடி நடந்தால், புதுச்சேரி கிளைச்சங்கத்திற்கு அதிகமாய் உதவியிருக்கும் என்று திருவாளர் ஆர். தேசிகப்பிள்ளை B. A. B. L. சங்க காரியதரிசி தலைவர்களுக்குத் தெரிவித்தார்'

நான்காவது கூடலூரில் ஞாயிற்றுக்கிழமை 31—5—31தேதி மாலை திருவாளர் பி. ஆனந்தரங்கப் பிள்ளை B. A. B. L. அட்வ கேட் அவர்கள் தலைமையின்கீழ் யாதவப்பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது. தலைவர் முன்னுரையில் இம்மாதரி கிளைச்சங்கங்கள் ஸ்தாபனம் செய்யப்படுவதால் யாதவமக்களிடம் ஓர் புதியஉணர்ச்சி ஏற்படுகின்றது. இவைகளில் நம் குலமக்கள் ஒருவரையொருவர் அறியவும் பல பிரிவுபட்ட நம் குலமக்களை ஒருங்கு சேர்க்கவும் முடிகிறது என்று தெளிவாகப்பேசினர். பிறகு ஒரு கிளைச்சங்கம் ஸ்தாபிக்கப்பட்டது.

---

## மகாநாடு கூட்டுவதுபற்றி யாதவர்களுக்கு ஒரு விண்ணப்பம்!

ஏறத்தாழ 20 இலக்ஷம் பெயர் கொண்ட நம் யாதவ மக்கள் வாழ்ந்துவரும் இச் சென்னை மாகாணத்தில் இதுவரையில் சென்னைக்கு அடுத்தகிண்டியிலும், ஸ்ரீரங்கத்திலும், மதுரையிலும், திருநெல்வேலியிலும், ராமநாதபுரத்திலும், செங்கோட்டையிலும் மகாநாடுகள் கூடப்பெற்று, பல அரிய பெரியகாரியங்களை நடத்தியிருக்கின்றன. ஒரு மகாநாட்டிற்கு உரிய செலவு ஏறத்தாழ இரண்டு ஆயிர ரூபாயாகின்றது. இதனை உற்று நடத்தக்கூடிய பெருந்தலைவர்களும், செல்வர்களும் ஆகிய யாதவ மக்கள் உள்ள நகரங்கள் நம் ராஜதானியில் மிகப் பல இல்லை. இருந்தவரையில் பெரும்பாலும் ஆங்காங்கு நடந்துவிட்டனவென்றே கூறலாம் இதற்குச் சாட்சி செங்கோட்டையில் நடந்த மகா நாட்டின் முடிவில் அடுத்த ஆண்டில் மகா நாட்டினை நடத்த எந்த நகரத்தினரும் முன்வராமையும், முன் நடந்த, திருச்சிராப்பள்ளிக் காரரே மீண்டும் தங்கள் ஊரில் நடத்துவதாக ஒருவாறு கூற நேர்ந்ததுமே யாகும். ஆகவே இனி மகாநாடுகள் எளிதில் நடைபெற எனக்குத் தோன்றும் ஒரு முறையை இங்கே கூறுகின்றேன்.

சங்கங்கள் இருக்கும் ஊர் அல்லது நகரம் ஒன்றுக்கு ரூபாய் 100-ரூபாய் or 50-க்குக்குறையாமல் மகாநாட்டின் செலவிற்கெனத் தரக்கூடிய 20 ஊர்கள் அல்லது நகரங்கள் ஒவ்வோராண்டிலும் முன் வந்து ஒருகுறித்த காலத்தினுள் தொகையைச் செலுத்திவிடல் வேண்டும். இங்ஙனமாயில் மிக எளிதாக ஒவ்வோராண்டிலும் ரூபாய் 2000-சேர்ந்து போகும். மாகாணச் சந்தாதார் இத் தொகைகளை முயன்று சேர்த்து ஒருமுறை வைத்துக்கொண்டு அதன்படி இதுவரை மகாநாடுகள் நடவாத இடங்களில் மகாநாடுகள் நடத்திவருதல் வேண்டும் என்பதாகும். இந்த எண்ணத்தைப் பற்றி அறிஞர்கள் தங்கள் அபிப்பிராயங்கள் எழுதுவார்களாக. இங்ஙனம் கொடுக்க முன்வரும் ஊரார்கள் எழுதித் தெரிவிப்பார்களாக.

எம். கெ. ஆராவமுது பிள்ளை.
M. R. A. S.
சென்னை.

யாதவர் இளைஞர் சங்கம், நாகை:

## ஒரு வேண்டுகோள்.



"கற்றலுடன் கேட்டறிந்து தெளிதல் நிஷ்டை."

தமிழகத்தில் எல்லாப்பாகங்களிலும் பரவியிருக்கும் நமது மரபினர்களின் முன்னேற்றமானது, பல துறைகளிலும் தடைபட்டு நிற்பதை நீக்கிச் சமூக சீர்திருத்தத்தாலும் கல்வி பரவுவதாலும் யாதவ மக்களின் அபிவிர்த்தியானது வளர்ச்சிபெற்று விளங்குமென உணர்ந்த சென்னை உயர்திரு M. K. ஆராவமுது பிள்ளை அவர்கள் 1917-ம் வருஷத்தில் ஸ்ரீயதுகுல மகா சங்கம் ஒன்றை நிறுவினர். அவரது முயற்சிக்கு உதவிபுரிந்து ஒற்றுமைத்துப் பல பெரியார்களும் தங்கள் தங்கள் இடங்களில் மகாநாடுகள் கூட்டி ஊக்கம் காட்டி வருகின்றனர். 1930-ம் வருஷத்தில் சமூக சீர்திருத்தத்துறையில் முற்போக்கடைந்த நமது இளைஞர்கள் பலர் சேர்ந்து சென்னை உயர்திரு T. S. வேணுநாதக்கோன் F. C. I. M. R. A. S, அவர்கள் தலைமையில் யாதவ இளைஞர் சங்கம் ஒன்றையும் ஸ்தாபித்தனர். இச்சங்கத்தின் அரிய நன்முயற்சியால் இம்மாகாணத்தில் பல நகரங்களில் கிளைச்சங்கங்கள் ஏற்பட்டு மகாநாடுகளும் நடைபெறுகின்றன. இவ்வித கிளர்ச்சிகளின் பயனாக நமது குலத்தினர் ஒருவரையொருவர் அறியவும் பல பிரிவுபட்ட நம்மவர்களை ஒன்று சேர்க்கவும் யாதவ ஏழைப்பிள்ளைகளுக்கு இலவசச்சம்பளம் கொடுத்து உதவவும் அனுகூலங்கள் உண்டாகியிருக்கின்றன.

ஒரு சமூக முன்னேற்றத்திற்குக் கல்வி தான் இன்றியமையாதது.

"கண்ணுடைய ரென்பவர் கற்றோர் முகத்திரண்டு
புண்ணுடையர் கல்லாதவர்."

யாதவ மக்கள் திரண்டு வசிக்கும் இடங்களில் பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தியும் ஏழைப்பிள்ளைகளுக்கு இலவசச்சம்பளம் கொடுத்து கலாசாலைகளில் உயர்தரக்கல்வி கற்கச்செய்தும் நாம் நமது குலத்தினரை கல்வித் துறையில் முற்போக்கடையச்செய்யவேண்டியது கடமை. மேலும் சமூகப் பழக்க வழக்கங்களில் தற்கால நாகரிகத்திற்கு ஒவ்வாதவைகளை அகற்றலும், பொருளாதார விஷயத்தில் அபிவிர்த்தியடையப் பல வழிகளைப்போற்றலும் வேண்டும்.

மேற்கூறிய முன்னேற்ற சாதனங்களை அமுலுக்குக்கொண்டுவர சங்கங்கள் மூலமாகத்தான் முடியும் என்பது யாவருக்கும் தெரிந்ததே. இந்த நோக்கத்துடன் நாகையிலும் அதைச் சுற்றியுமுள்ள கிராமங்களில் வாழும் யாதவ நண்பர்கள் பலர்கூடித்தீர்மானித்ததின் பயனாய் 14—4—1931-ல் ஒருயாதவ இளைஞர் சங்கத்தை நாகையில் ஸ்தாபித்திருக்கின்றனர். நாகை திரு A. K.

கோபால்சாமி பிள்ளை அவர்கள் தலைவராகவும், திரு K. குப்புசாமிபிள்ளை அவர்கள் திரு K. துரைசாமி பிள்ளை B. A., L. T., அவர்கள் உப தலைவர்களாகவும் பல உற்சாகமுள்ள நண்பர்கள் நிர்வாக கமிட்டி அங்கத்தினர்களாகவும் இருந்து தொண்டு செய்து வருகின்றனர். ஆகையால் இதைக் கண்ணுறும் யாதவ சகோதர சகோதரிகள் யாவரும் இத்துடனிருக்கும் நமூனாவில் கையெழுத்துச் செய்து வருஷ சந்தா ரூபாய் ஒன்ராவது அல்லது மேற்பட்ட தொகையாவது செலுத்திச் சங்கத்தில் அங்கத்தினராகச்சேர்ந்து ஆதரித்து யாதவ சமூக முன்னேற்றத்திற்கு உதவிபுரியும்படி சங்கத்தின் சார்பாக மிகவும் வேண்டிக்கேட்டுக்கொள்ளப்படுகிறார்கள்.

"ஒன்றேசெய்யவும் வேண்டும், அவ்வொன்றும் நன்றே செய்யவும் வேண்டும்,
நன்றும் இன்றே செய்யவும் வேண்டும்."

யாதவ இளைஞர் சங்கம்,
நாகப்பட்டணம்
20—4—31.

இப்படிக்கு யாதவ சமூக ஊழியன்,
T. M. இராஜகோபால் பிள்ளை,
காரியதரிசி.

ஸ்ரீ

## மாதர் பரிசு!

(1) மாதர் கடமை!
(2) பெண்மக்கள் நிலை!
(3) மாதர்கள் முன்னேற்றம்!
(4) பெண்கல்வி அவசியமா?
(5) விதவா விவாகம் வேண்டியதா?
(6) கலப்பு மணம்!
(7) யாதவர்களும் பெண்மக்களும்!
(8) பெண்ணுரிமை!

என்னும் எட்டுக் கட்டுரைகளையும் பெண்ணுலகு என்னுந் தலைப்பில் யாதவ சமூகப் பெண்மக்கள் "யாதவ மித்திரன்" பத்திரிகையில் எழுதி யனுப்புவோர்க்கு எட்டுப் பரிசு வழங்கப்படும். கட்டுரை உதவுவோர் இருபது வயதுக்கு உட்பட்டவர்களாக இருக்கவேண்டும். முதற் பரிசு மித்திரன் மூன்றும் ஆண்டு ஆரம்ப தினத்தன்று "ஸ்ரீ கோபால் மஹாலில்" வழங்கப்படும். மற்ற பரிசுகளும் மாதாமாதம் கொடுக்கப்படும். கட்டுரை வழங்குவோர் இவ் எட்டனுள் எதை வேண்டுமானாலும் முதலில் எழுதியனுப்பலாம். ஆண்மக்கள் இதில் கலக்கக் கூடாது. பின்பு ஆடவர்களுக்குத் தனியாக இடமளிக்கப்படும். இது சம்பந்தமாய் எவ்வித கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ளப்படமாட்டாது. சந்தா நம்பரையும் குறிப்பிடுக.

M. K. காந்திதாஸ், பர்மா.

குறிப்பு:-மாதர் பரிசிற்கு வியாசம் எழுதுவோர் நாளது புரட்டாசிமீ 10உக்குள் தெளிவாயெழுதி அனுப்பவேண்டும்.

# திருவல்லிக்கேணி யாதவ சத்திர கட்டிட

# விளம்பர வெளியீடு.



"வளவேழுலகின் முதலாய வானோ ரிறையை யருவினையேன்,
களவேழ் வெண்ணெய் தொடுவுண்ட கள்வா வென்பன் பின்னையும்,
தளவேழ் முறுவல் பின்னைக்காய் வல்லானுயர் தலைவனாய்,
இளவே றேழுந்தழுவிய எந்தாயென்பன் நினைந்துநைந்தே"—சடகோபர்.

இதனால் யாதவ ஸ்ரீமான்கள் அனைவருக்கும் அறிவிப்பது:—

ஸ்ரீ பேயாழ்வார், திருமழிசைப்பிரான், திருமங்கை மன்னன் இவர்களால் மங்களா சாஸநம் செய்தருளப்பெற்ற பிருந்தாரண்ய க்ஷேத்திரமாகிய இத் திருவல்லிக்கேணியில் கிழண்டை மாடவீதி தென்கிழக்குப் பாரிசத்தில் வெங்கடாரங்கப் பிள்ளை தெருவில் தருமத்தின் பொருட்டு யாதவர்களால் வாங்கப்பட்டு டிரஸ்டிகள் மூலமாக பரிபாலிக்கப்பட்டுவரும் சர்வே நெ. 2568, கலக்டர் சர்ட்டிபிகேட் நெ. 3421 உள்ள ஒரு பாகத்தில் வடக்கு தெற்கு அகலம் அடி 34 கிழக்குமேற்கு நிகளம் அடி 68 இந்த அளவில் ஓர் யாதவ சத்திரம் கட்டிமுடிக்க வேணுமாய்ச் சென்ற 29-1-22, 17-8-24-ல் கூடிய, யாதவ கூட்டத்தின் கோரிக்கையை நிறைவேற்றும் பொருட்டு, யாதவ கனவான்கள் கருணையுடன் மணியார்டர் மூலமாகவும் நேரிலும் செலுத்திய பொருள் உதவியாலும் இந்தியன் சேவிங்ஸ் பாங்கில் டிபாசிட் செய்திருக்கும் யாதவ தர்ம சொத்தின் வருமானத்தைக்கொண்டும் பிரபவ-ஹு தை-மீ புஷ்யத்தில் வேலை ஆரம்பித்து முன் பிராந்தா இரண்டு அறை வரையில் மேல் தளவரிசை சுவர் கட்டிடவேலை பூர்த்தி ஆயின. இன்னும் ஆகவேண்டிய வேலையைச் சம்பூரணம் செய்யும் பொருட்டு 28-2-29 வரையில் வரவு செலவு கணக்கு இவைகளை வெளியிட்டுப் பணம் வசூலிக்க முயன்றதில் இரண்டு ஒருவர் வசூல் சிலாக்கியமாய் இருக்கவில்லை என்று நின்று விட்டனர். ஆனால் வேறொருவர் ஸ்ரீ க. முருகேசபிள்ளை இரவு பகல் என்று பாராமல் அலைந்து திரிந்து ரூபா 1க்கு அணா நாலு கமிஷன் விழுக்காடு வசூல் செய்த பணத்தாலும் நிலவருமானத்தாலும் பூச்சுவேலை கதவுவேலைகள் முடிந்தன. 21-6-25, 25-5-30-ல் கையொப்பமிட்டுப் பணம் தவறாமல் கொடுத்து உதவிய கனவான்களுக்கும் அதிகப்படி கொடுத்த மகா-ா-ா-ஸ்ரீ வி. கண்ணப்பபிள்ளை க. சுப்புராயலு நாயுடு அவர்களுக்கும் சபையார் வந்தனம் செலுத்துகின்றனர். இன்னும் மற்ற கையொப்ப மிட்டவர்கள் மற்றுமுள்ள யாதவர்கள் தத்தமது சத்தியானுசாரம் பொருள் உதவி செய்யாமையால் கூடம் தாழ்வாரம் சமையல் கட்டு மேல் தளவரிசையும் தரை வேலையும் பூர்த்தி ஆகாமல் நின்றுவிட்டன. ஏறக்குறைய இன்னும் ரூபா (2000) இரண்டு ஆயிரம் வரை வேண்டியிருக்கிறது.

இது விஷயமாய 7-9-30, 5-10-30-ல் டிரஸ்டிகள் கூடிய சபையில் அடியில்கண்ட விஷயங்களைக் குறித்து மறுபடியும் ஓர் யாதவ சபை கூடவேண்டுமென்று அபிப்பிராயப் பட்டமையால் அதற்காக நாளது மே-மீ 3-உ ஞாயிற்றுக்கிழமை காலை 9-மணிக்குத் திருவல்லிக்கேணி வெங்கடாசல நாயக்கன் தெரு 5-10வது நெம்பர் உள்ள யாதவ சத்திரத்தில் யாதவசபை கூட்டப்படும். அப்பொழுது யாதவர்கள் அனைவரும் அக்கூட்டத்திற்கு வரும்படியாய் டிரஸ்டிகள் அனைவரும் கேட்டுக்கொள்ளுகிறோம்.

## ஷை சபையில் தீர்மானிக்கவேண்டிய விஷயங்கள்.

(1) வரவு செலவு ஸ்டேட்மெண்டு தணிக்கை செய்தல்.

(2) சத்திர கட்டிட சம்பூர்ண விஷயமாக கடன் வாங்கலாமா என்பது பற்றி ஆலோசித்தல்.

(3) கட்டிட வேலை செய்த வரையில் ஓர் அறை தர்ம பரி பாலன சபைக்கு வைக்கப்பட்டு வாடகைக்கு விடலாமா என்பதைக் கவனித்தல்.

(4) டிரஸ்டி மகா-ா-ா-ஸ்ரீ சி குப்புசாமி பிள்ளை என்பவர் வெளியூரில் அலுவல் பார்ப்பதால் ஷையார் 25-6-30-ல் எழுதி அனுப்பிய அர்ஜியின் கோரிக்கையைக் கவனித்தல்.

(1-3-20) முதல் (31-3-31) வரையில் வரவு செலவு விபரம் இத்துடன் சேர்க்கப்பட்டிருக்கிறது. இதில் யாதவ கனவான்கள் பொருள் உதவி செய்த தொகையையும் நில வருமானத்தையும் காணலாம். தவிர விசேஷம் அறிய விரும்புவோர்கள் அதை டிரஸ்டிகள் மூலமாகத் தெரிந்து கொள்ளலாம்.

குறிப்பு.—சத்திரத்திற்காக பொருள் உதவி செய்யும் கனவான்கள் திருவல்லிக்கேணி பிரான்சு இந்தியன் பாங்கில் யாதவ சத்திர கட்டிட கணக்கு என்கிற பெயராலாவது பொக்கிஷதார் செ. இராமாநுஜம் பிள்ளை, நெ. 28 நல்லதம்பி முதலி தெருவு, திருவல்லிக்கேணி என்கிற விலாசத்திற்காவது பணம் அனுப்பி ரசீது பெற்றுக் கொள்ளலாம்.

1. செ. இராமாநுஜம் பிள்ளை,
2. தெ. பார்த்தசாரதி பிள்ளை,
3. டி. எம். ஸ்ரீநிவாசப்பிள்ளை,
4. வி. ராமசாமி பிள்ளை,
5. சி. குப்புசாமி பிள்ளை,
6. பெ. கிருஷ்ணப்பிள்ளை,

யாதவ தர்ம சொத்தின் டிரஸ்டிகள்.

திருவல்லிக்கேணி யாதவ சத்திர கட்டிட[illegible]-3-29) முதல் (31-3-31) வரையிலுள்ள வரவு செலவு கணக்கு.

| நாமதேயங்கள். | | வரவு. | | | சாமான்களின் விபரம். | செலவு. | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | பொக்கிஷதாரியிடம் கையிருப்பு ... | 409 | 11 | 7 | செங்கல் ... | 166 | 3 | 0 |
| தர்ம சொத்தின் நில வாடகை வரும்படியில்... | இந்தியன் பாங்கி மூலமாக வரவு ... | 350 | 0 | 0 | மரம் ... | 96 | 1 | 11 |
| | | | | | சுண்ணும்பு ... | 104 | 12 | 0 |
| திருவல்லிக்கேணி ... | செ. இராமாநுஜம் பிள்ளை ... | 100 | 0 | 0 | மணல் ... | 52 | 4 | 0 |
| புரசைவாக்கம் ... | வி. கண்ணப்ப பிள்ளை ... | 100 | 0 | 0 | இருமண் ... | 37 | 4 | 0 |
| திருமயிலை ... | க. சுப்புராயலு நாயுடு ... | 50 | 0 | 0 | சிமிட்டி ... | 148 | 14 | 0 |
| திருவல்லிக்கேணி ... | T. M. ஸ்ரீநிவாசப் பிள்ளை ... | 42 | 0 | 0 | இரும்பு சாமான் ... | 47 | 2 | 0 |
| திருமலையி ... | செ. பெருமாள் நாயுடு ... | 13 | 0 | 0 | வர்ணம் ... | 6 | 14 | 6 |
| எழுகிணறு ... | T. S. சின்ன தம்பி பிள்ளை ... | 10 | 0 | 0 | கொத்து சித்து கூலி வகையரா ... | 335 | 13 | 6 |
| பெரியமெட்டு ... | S. R. கிருஷ்ணசாமி பிள்ளை ... | 5 | 0 | 0 | | | | |
| ,, | பு. மு. ராஜப் பிள்ளை ... | 5 | 0 | 0 | பில்தண்டினவர் கமிஷன்... | 49 | 8 | 0 |
| சிந்தாதிரி பேட்டை ... | பி. சி. கோதண்டராம பிள்ளை ... | 5 | 0 | 0 | அச்சிடச் செலவு ... | 13 | 1 | 0 |
| திருவல்லிக்கேணி ... | பு. மு. ராமகிருஷ்ணப் பிள்ளை ... | 5 | 0 | 0 | தபால் செலவு ... | 3 | 8 | 9 |
| ,, | எம். கிருஷ்ணமூர்த்தி பிள்ளை ... | 5 | 0 | 0 | வண்டிச் செலவு ... | 3 | 8 | 0 |
| புரசைவாக்கம் ... | புருஷோத்தம் பிள்ளை ... | 1 | 0 | 0 | பொதுச் செலவு ... | 5 | 3 | 2 |
| | கலியாண காலத்தில் கோடுத்தது | | | | மொத்தம் ... | 1070 | 1 | 10 |
| | தெ. பார்த்தசாரதி பிள்ளை மூலமாக | | | | | | | |
| பெத்துநாயக்கன் பேட்டை... | கடப்பாக்கம் திருவேங்கடப் பிள்ளை ... | 2 | 10 | 0 | கையிருப்பு இந்தியன் பாங்கியில் 30 3 8 | 43 | 10 | 5 |
| திருவல்லிக்கேணி | சிறுபழவேற்காடு அண்ணுசாமி பிள்ளை... | 3 | 0 | 0 | | | | |
| ,, | தென்பாக்கம் குப்புசாமி பிள்ளை ... | 5 | 2 | 0 | பொக்கிஷதாரர் இடம் 13 6 9 | | | |
| | பெ. கிருஷ்ணப் பிள்ளை மூலமாக | | | | | | | |
| பெத்துநாயக்கன் பேட்டை... | சேக்காடு ராஜப் பிள்ளை ... | 1 | 0 | 0 | | | | |
| திருவல்லிக்கேணி ... | சிறுபழவேற்காடு நல்லமுத்து பிள்ளை ... | 0 | 4 | 0 | | | | |
| | செ. ராமானுஜம் பிள்ளை மூலமாக | | | | | | | |
| ,, | பிடகல குப்பம் துரை பிள்ளை ... | 0 | 13 | 0 | | | | |
| இந்தியன் பாங்கில் S. B. No. 6/467 டிசம்பர் மாதம் கணக்கில் வட்டி... | | 0 | 3 | 8 | | | | |
| | ஆ | 1113 | 12 | 3 | ஆக மொத்தம் ... | 1113 | 12 | 3 |

☞ செ. இராமாநுஜம் பிள்ளை, பொக்கிஷதார்.

☞ டி. எம். ஸ்ரீநிவாசப் பிள்ளை, கணக்குப் பரிசோதகர்.